

34
திருநெல்லை
6.04.2015 அன்று தமிழ்நாடு கெமிக்கல்ஸ் நிறுவனத்தைக் கண்டித்து சனாதன தர்ம உலகப் பல்கலைக்கழக அறநிலைக் கல்வி நிறுவனங்கள் நடத்திய போராட்டம்.
ஆன்மீகத் திங்களிதழ்
மன்மத – சித்திரை – 2015 – ஏப்ரல்

உ
சிவமயம்

# திருநெல்லை

## ஆன்மீகத் திங்களிதழ்

மன்மத - சித்திரை - 2015 - ஏப்ரல் இதழ் - 34

சிறப்பாசிரியர் :
சீர் வளர் சீர்
**மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்**

ஆசிரியர் குழு :
காப்பியக் கவிஞர் **நா. மீனவன்**
முனைவர். பேரா. **நா. வள்ளி**
பேரா. **நா. சுப்பிரமணியன்**

ஆலோசகர் :
பேரா. தமிழாகரர்.
**தெ. முருகசாமி**

பதிப்பாசிரியர் :
பேரா. **ம. கார்மேகம்**

வெளியீடு :
**கோவிலூர் மடாலயம்**
கோவிலூர் - 630 307.
மானகிரி (அஞ்சல்),
(வழி) காரைக்குடி
சிவகங்கை மாவட்டம்
போன் : 04565 - 236846

அச்சிட்டோர் :
**திருமகள் அச்சகம்**
"ஜெய சௌந்தர்",
7G. ஜவஹர் தெரு, நியூ டவுன்
காரைக்குடி - 630 001.

## பொருளடக்கம்



தனி இதழ் ரூ 10.00
ஆண்டுச் சந்தா ரூ 100.00

உ
சிவமயம்

# இறை வணக்கம்

மதிநதியன் புரிசடையன் மலையரையன் மகள்மணந்த
மாபெரியன் மங்கலப்பொன் மணிமுடியன் கயலுகளும்
மதுநதியன் துதிப்பிரியன் மழுதீமான் உளகரத்தன்
மயிலாலக் குயில்பாடும் மாண்புடைய வன்னிவன
மன்னவனாம் தென்னவனை மலைவல்லி நாயகன்தாள்

கதியெனவந் தடிவீழ்வார் கருணைபெற அருள்பவனைக்
கடலிடையில் அலைநடுவில் இட்டமலை மத்தசையக்
கடியரவு பிணைத்திழுக்கக் கக்குவிடம் உண்டசிவன்
கந்தரத்தைப் பிடித்தமலர்க் கையுடைய தவசீலி
கருணைபொழி சுந்தரப்பொன் கயல்விழிக்குத்
தாம்மயங்கு

பதிகொற்ற வாளீசன் பாதமலர் பற்றிடுவார்ப்
பாலிக்கும் சிவநாதன் பக்கமுறை கணநாதன்
பரமசிவன் குடமுனிக்குப் பண்டுதமிழ் அருளியவன்
பாடுபுகழ்க் கவுணியர்க்குப் பால்சுரந்த பெருமாட்டி
பக்கமிருந் துடல்தழுவப் பரிந்தணைக்கும் பசுபதிதாள்

துதியறியும் அடியவர்தம் துணையெனவந் துதவுமொரு
தோகைமயில் திருநெல்லை தூயதா மரைப்பதத்தைத்
தொழுவார்தம் பவப்பணிகள் தோற்றோடல் தனையறிந்து
தொண்டர்களும் அண்டர்களும் தூயதவ முனிவர்களும்
துதிக்கின்றார் இஃதறிந்து நாமுமினித் துதிக்கலாமே.

காப்பியக் கவிஞர் கவிமாமணி நற்றமிழ் நாவலர். நா. மீனவன்

# ஆசியுரை

**சீர் வளர் சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்**

மனிதர்கள் செய்யும் குற்றங்களைப் பொதுவாக மூன்று வகையாகப் பிரிக்கலாம். அவை தவறுகள், பிழைகள், குற்றங்கள். தவறுகளை உடனடியாகத் திருத்திக் கொள்ள முடியும். திருத்திக் கொள்வதன் மூலம் தன்னுடைய வாழ்விலே வெற்றிகள் அடைந்து மேம்படுத்திக் கொள்ள முடியும். தவறுகள் அறியாமையாலோ கவனச் சிதறல்களாலோ நடைபெறக் கூடியவை. இவற்றைச் செய்கின்ற தனிமனிதனுக்குப் பாதிப்புகள் அதிகம் ஏற்படாது; பின் விளைவுகள் இருக்காது. பிழைகள் என்பது தொடர்ந்த தவறுகளாலே பழக்கமாக மாறிப் போன மனத் திரிவுகளாலே ஏற்படக் கூடியவை. இவற்றையும் முயன்று திருத்திக் கொள்ளலாம். தனிமனிதன் செய்கின்ற பிழைகள் அடுத்தவர்க்குத் தீங்கு செய்யாத அளவில் இருந்தால் அவற்றாலே பின் விளைவுகள் அதிகம் இருக்காது; பாதிப்புகள் அதிகம் இருக்காது.

மூன்றாவது வகையான குற்றம் என்பது தெரிந்து செய்கின்ற பாவங்கள். இவற்றிலே தனிமனிதக் குற்றம், சமுதாயக் குற்றம் என்று இரண்டு வகையாகச் சொல்லலாம். புகை பிடிப்பது, சூதாட்டம், மது அருந்துவது போன்றவை அதில் சம்பந்தப்பட்ட மனிதர்களை மட்டும் பாதிக்கும் குற்றங்கள். ஆனால் இக்குற்றங்களும் அளவை மீறினால் அவனுடைய குடும்பம் சுற்றத்தார் எல்லோரையும் பாதிக்கக் கூடியவை. எனவே இக்குற்றங்களையும் கண்டிப்பாக முயன்று திருத்திக் கொள்ள வேண்டும். திருத்திக் கொள்வதே வாழ்க்கையின் வெற்றிக்கு உதவும்.

அடுத்ததாகச் சமுதாயக் குற்றம்; நம்முடைய அறிவார்ந்த முன்னோர்கள் இவற்றைத் தெளிவாக வரையறைப் படுத்தி இருக்கிறார்கள். கொலை கொள்ளை பிறன்மனை விரும்புதல் தேசத்துரோகம் பொருளாதாரக் குற்றங்கள் ஆகியவை இந்தச் சமுதாயக் குற்றத்திலே அடங்கும். இந்தக் குற்றங்களைச் செய்வதாலே பிற மக்கள்

மிகவும் பாதிக்கப்படுவார்கள். அதனால் செய்ததற்குப் பின் விளைவுகள் அதிகமாக ஏற்படலாம். இவர்கள் சட்டத்தின் பிடியில் அகப்பட்டால் அரசாங்க விதிப்படித் தண்டனைகள் பெறுவர். ஆனால் இறைவன் நோக்கிலே இந்தப் பாவங்களுக்குக் கடுமையான தண்டனைகள் காத்திருக்கலாம்.

தன்னல மிகுதியாலே பிற உயிர்களுக்குக் கடுமையான சேதங்கள் விளைவித்துப் பொருள் சேர்ப்பதற்காக மனசாட்சி இல்லாமல் பொருள்களை உற்பத்தி செய்தல், வணிகம் செய்தல் ஆகியவை மிகப் பெரிய பாதகச் செயல்கள். தீங்கு விளையும் என்று தெரிந்தே மக்கள் குடியிருப்புகளுக்கு இடையே தொழிற்சாலை தொடங்குதல், கழிவுகளைச் சுத்தம் செய்யாமல் பொது நீர் நிலைகளிலே வெளியேற்றுவது, அசுத்தக் காற்றை வெளியேற்றுவது போன்றவை தனிமனிதக் கொலைகளை விட மிகப்பாதகமானது. பெரிய ஜவுளித் துறை ஆலைகள், சாயப்பட்டறைகள், மின்னணு இயந்திரக் கழிவுகள், வேதியியல் தொழிற்சாலைகள் ஆகியவற்றை மக்கள் குடியிருப்புகள் இல்லாத பகுதிகளிலே தொடங்க வேண்டும். மக்களுக்குத் தொல்லை தராத வகையில் இந்த ஆலைகள் தொழில் நடத்திப் பொருள் சேர்க்க வேண்டுமே தவிர மக்களுக்குப் பலதரப்பட்ட வியாதிகளையும் தொல்லைகளையும் தரக் கூடிய ஆலைகளை உடனடியாக அகற்ற வேண்டும்.

தங்களுடைய செல்வத்தாலும் செல்வாக்காலும் அரசாங்கத்தைச் சரிக்கட்டிக் கொள்ள முடியும் என்ற நினைப்பிலே ஆலையைத் தொடர்ந்து நடத்துவது எந்த விதத்திலும் நியாயம் இல்லை. இதைப் போன்ற அநியாயங்களைச் செய்பவர்கள் இறை நீதி மன்றத்திலே கடுமையாகத் தண்டிக்கப்படுவார்கள். மனிதனாகப் பிறப்பவன் மனச்சாட்சியோடு வாழ்வதே சிறந்தது.

*ஸ்ரீ சற்குருநாதன் துணை*

தவத்திரு குமார தேவர் அருளிய

# மகாராஜா துறவு (தொடர்ச்சி)

### சொர்க்க இன்பமும் இல்லை என்று உரைத்தல்

84. மாகர்க்கு அசுரர் பகைஉளது
மகிழ்ச்சி வாட்டம் மிகவும்உளது
ஆகத்து அகலா நோயும்உளது
அனங்கன் உளது நசைஉளது
போகத்து அழுந்தல் மிகஉளது
பொன்றல் உளது கற்பத்தே
சோகத் திறங்கள் இவைஉடைய
துறக்கத்து என்னை சுகம்உளதே.

"சொர்க்கத்தில் தேவர்களுக்கு அசுரர் பகை உண்டு. மகிழ்ச்சியும் உண்டு, வாட்டமும் மிகுதி உண்டு. உடம்பில் அகலாத நோய் உண்டு. மன்மதனால் துன்பம் ஏற்படும். அது வேண்டும், இது வேண்டும் என்னும் அளவற்ற ஆசை இருக்கின்றது. இன்ப வடிவமான போகத்திலும் துன்பம் இருக்கின்றது. உலகம் அழிகின்ற காலத்தில் இறத்தலும் இருக்கின்றது. பற்பல இன்ப துன்ப வகையாகிய இவற்றை உடைய சொர்க்கத்தில் என்ன இன்பம் இருக்கின்றது?"

### எந்தப் பிறப்பிலும் இன்பம் இல்லை

85. தேவர் மனிதர் துன்பத்தின்
திறங்கள் இவ்வாறு ஆகியிடில்
ஆவ கீழாம் மிருகம்முதல்
அசரம் ஈறாம் ஐவகையில்
ஓவல் இல்லாத் துன்புக்குஓர்
உவமை இல்லை நிரயத்தில்
நோவாத் துன்பம் சொல்வதுஎனை
நோயே பவத்தில் சுகம்வீடே.

தேவர், மனிதர் ஆகியோரின் துன்ப வகைகள் இவ்வாறு இருந்தால் தாழ்ந்தவைகளாகப் பிறக்கின்ற விலங்கு முதலாகத்

தாவரங்கள் ஈறாக உள்ள ஐவகை* உயிர்களுக்கு ஏற்படும் முடிவில்லாத துன்பங்களுக்கு உவமையே இல்லை. நரகத்தில் அடையும் வருத்தம் தரும் அந்தத் துன்பத்தை வரையறுத்துக் கூறுவது எவ்வாறு? இவற்றை நன்கு ஆய்ந்து காணும்போது பிறப்பிலே துன்பம் உண்டு. வீடே இன்ப வடிவாக இருப்பது.

* ஐவகைப் பிறவிகள் = மிருகங்கள், பறவைகள், நீர்வாழ்வன, ஊர்வன, தாவரம்.

86. இந்த இழிவை உடைய
இந்த மாயை அசத்தே
அந்த உயர்வை உடைய
அந்தப் பிரமம் சத்தே
தம்தம் மனதில் தேர்ந்தோர்
தள்ளி எஃதை நிற்பர்
உந்தன் மனதில் நன்றாய்
யூகித்து அமைச்ச பாராய்.



மந்திரியே! அழியும் தன்மை உடைய இந்த மாயா உலகம் அசத்து. மேலானதான பிரம்மம் முக்காலத்திலும் நிலைத்திருப்பதால் சத்து என்று உணர்வாயாக. இதை நன்றாக ஆராய்ந்து உணர்ந்தவர்கள் எதைத்தள்ளி விடுவார்கள்? எதைச் சார்ந்திருப்பார்கள்?
அமைச்சரே! இதை நீயே நன்றாய் யோசித்துப் பார்த்துத் தெரிந்துகொள். (மாயப் பிரபஞ்சத்தின் மீதுள்ள பற்றைத் தள்ளிவிட்டுப் பிரம்ம சொரூபத்தைச் சார்ந்திருப்பார்கள் என்பது கருத்து)

## கொள்ளத் தக்கதையும் தள்ளத் தக்கதையும் கூறுதல்

87. பொய்என்று இதனை அறிந்தோர் பொருந்தி நிற்பதுஉளதோ
மெய்என்று அதனை அறிந்தோர் மேவாது இருப்பதுஉளதோ
ஐயம் உளதோ இதனில் அமைச்ச பாராய் நன்றாய்
உய்யஅறிவு இலாதோர் உழல்வர் நீக்க மாட்டார்.

இந்த மாய உலகம் பொய் என்று அறிந்தோர். இங்கு யான் என்னும் பற்றோடு சேர்ந்து வாழ்வது உண்டோ? அந்தப் பிரம்மமே உண்மையான பொருள் என்று உணர்ந்தோர் முயன்று அதனை அடையாமல் இருக்கின்றார்களா? அமைச்சரே இது பற்றி ஏதேனும் ஐயப்பாடு உண்டா? சம்சார பந்தத்தில் இருந்து தப்பிப் பிழைக்கத் தெரியாதவர்கள் இந்த மாயா உலகிலேயே வருந்துவார்கள். நான், எனது என்ற எண்ணத்தையும் நீக்க மாட்டார்கள்.

88. பொய்யை மெய்என்று அறிந்து போதம் இன்மையாலே
மெய்யைப் பொய்என்று எண்ணி மெலிந்தே உழல்வர்உலகர்
பொய்யைப் பொய்என்று அறிந்து போத குருவின்அருளின்
மெய்யை மெய்என்று அறிந்தே மெலிவு தீர்வர் உயர்ந்தோர்.

தத்துவ ஞானம் இல்லாமையாலே உலகத்தார், பொய்ப் பொருளாகிய இந்த மாயா உலகத்தை உண்மைப் பொருள் என்று வருந்தி அலைவார்கள். உலகம் துயர வடிவானது என்று உணர்ந்தோர் அதன்பால் பற்று வைக்க மாட்டார்கள். ஞானகுருவின் அருளால் பொய்ப் பொருளாகிய இந்த மாய உலகத்தைப் பொய் என உணர்ந்து கொள்வார்கள். மெய்ப் பொருள் ஆகிய பிரம்மத்தை நிலையான பொருள் என எண்ணிச் சுகதுக்கங்களால் உண்டான வருத்தம் தீர்வர்.

89. துன்பம் தோன்றில் எவரும் துறந்து ஏகராய்த் தனித்தே
இன்பம் தேடல் இயற்கை இன்பம் என்றே தோன்றில்
அன்பது ஆக நீங்கார் அவர்கட்கு எங்ஙன் கூடும்
நன்பரம ஞான நாட்டம் அமைச்ச சொல்லாய்.

அமைச்சரே! எவர்க்கேனும் குடும்ப பாரம் துன்பம் என்ற விவேகம் வருமானால் எப்படிப் பட்டவராயினும் அக்குடும்ப பாரத்தைத் துறந்து, தனித்து இருந்து அந்த இன்பத்தைத் தேட முயற்சி செய்தல் இயல்பே. குடும்ப பாரம் இன்பம் என்று எவர்க்கேனும் தோன்றினால் அதில் விருப்பம் மிகுந்து நீங்க மாட்டார்கள். அத்தகையவர்களுக்கு பிரம்மத்தைப் பற்றிய ஞானம் எவ்வாறு கைகூடும்? சொல்க!

90. இழிவை உணர்ந்தால் உயர்வை எவரும் தேடி நோக்கும்
இழிவை உணரார் உயர்வை எய்த நோக்கார் என்றும்
இழிவை இழிவுஎன்று உணர எந்தக் காலம் வாய்க்கும்
இழிவை உடையோர்க்கு அமைச்ச இதனை யூகித்து உணராய்.

அமைச்சரே, எவனாயினும் ஒருவன் உலகத்தின் இழிவை உணர்ந்தால் உயர்வான பிரம்மத்தை அடைய வேண்டுமென்று ஆசைப்படுவான். இம்மாய உலகத்தின் இழிவை உணராதவர் உயர்ந்த பிரம்மத்தை அடைய எக்காலத்திலும் எண்ண மாட்டார்கள். ஆசை, கோபம் முதலிய அகங்கார குணங்களை உடையோர்க்கு இம்மாய உலகத்தின் தன்மையை இழிவு என்று அறிந்திட எந்தக் காலம் வாய்க்குமோ? அமைச்சரே! சற்றுச் சிந்தனை செய்வீராக.

91. பேத வாதிகளைப் போல்பிர பஞ்சம் வேறு எனவே
ஈது அகன்றது அலவே எமைஅன்றிஅதுஇல் என்றே
போத விழியில் துறந்த புனிதத் துறவே கண்டாய்
சீத மதிபோல் குளிர்ந்து செனன வெப்பம் தீரும்.

ஈசனும், உயிரும் வேறெனக் கூறும் பேத வாதிகளைப் போல மாயா உலகம் பிரம்மத்தில் இருந்து வேறானது எனக் கொண்டால் இந்த மாய உலகம் நம்மை விட்டு நீங்காதது ஆகும். அதனால் நமக்கு எப்போதும் துன்பமே விளையும். பார்வைக்குக் கயிறு பாம்பாய்த் தோன்றுவது போல, எம்மை அன்றி ஏதும் இல்லை என்று உணர்ந்த ஞானப் பார்வையால், அம்மாய உலகத்தை விட்ட தூய துறவே சிறந்தது. அதனால் உள்ளம் நிலவு போலக் குளிர்ந்து பிறவி வெப்பம் அனைத்தும் நீங்கும்.

92. இருந்த இடத்தில் இருந்தே எய்தலாம் என்று உரைக்கில்
திருந்து நிமல மனத்தோர்தீரர் எனினும் ஒழிந்தே
பொருந்துஏ காந்தத்தில் போதம் அடக்க வேண்டும்
வருந்தும் மனத்தோர்க்கு என்னை வாய்க்கும் அமைச்ச
சொல்லாய்.

அமைச்சரே நீங்கள் இல்லறத்தில் இருந்து கொண்டே வீடு பேறு அடைய முடியும் என்று சொன்னீர். இல்லறத்தில் இருப்பவன் எவ்வளவுதான் தீரனாக இருந்தபோதிலும் குடும்பச் சுமையை இறக்கி வைத்து விட்டுத் தனி இடத்தில் இருந்து யான் எனது என்ற அபிமானத்தை விட்டு மனத்தை ஒடுக்கவேண்டும். குடும்பச் சுமையின் துன்பங்களில் உழல்பவருக்கு இந்த அமைதி கிட்டாது. அதனால் பரமானந்த நிலையை அடைவதற்கான சாதனைகளைச் செய்யமுடியுமா?

*(தொடரும்...)*

## ஞான வாசிட்டக் கதைகளும் தத்துவமும் (தொடர்ச்சி)

(சாது மெய்யப்ப ராமசுவாமி, கோவிலூர் மடாலயம்)

### III/07/10 : பாலன் கதை

(முற்குறிப்பு : மொத்தம் எட்டுப் பாடல்களை மட்டுமே கொண்ட இக்கதை, உற்பத்திப் பிரகரணத்தின் மிகச்சிறிய பகுதிகளில் ஒன்றாகும். முதல் மூன்று மற்றும் கடைசிப் பாடல்களில் தத்துவமும், இடைப்பட்ட பாடல்களில் கதையும் கூறப்பட்டுள்ளது.

அம்மாவிடம் கதை கேட்கும் சிறு குழந்தைக்கு, ஏதோ ஒரு கதை மட்டுமே வேண்டும். கதையின் உண்மை பற்றியெல்லாம் ஆய்வு செய்ய அக்குழந்தை முற்படாது. பெரியவர்களும் கூட உலகியலை எவ்விதப் பகுப்பாய்வும் (விசாரணை) இன்றி, குழந்தை போலவே ஏற்கிறார்களே எனும் ஆதங்கத்தோடு இக்கதை கூறப்படுகிறது.)

**கதைப்பகுதி:** வசிட்டர், ஒரு முறை, பிரம்மம், மாயை, மாயையால் நமக்கு உண்டாகும் மன மயக்கம் பற்றிய தத்துவங்களைக் கூறத் தொடங்கினார். (இது தத்துவப் பகுதி.) அதற்கு எடுத்துக்காட்டாக,

**“திரமறு தனையர்க்கு அன்னைசொற் கதைபோற் செப்பிய
இவையெலாம் திடமாம்
கரமலர் முகிலே.....”**

(திரமறு தனையர் = திட அறிவற்ற குழந்தை, கரமலர் = கையில் (தாமரை) மலரேந்திய, முகிலே = கார்வண்ணனே)

என இராகவரை விளித்தார். இராகவரும் அக்கதையாது என வினவ, வசிட்டர் கூறிய கதையாவது:

கதை கேட்பதில் விருப்பமுடைய, ஆனால் உண்மைக்கும் பொய்க்கும் வேறுபாடு தெரியாத ஒரு பாலன் இருந்தான். அவன் மிகவும் விருப்பத்தோடு, தாய் கூறும் கதையைக் கேட்பான். அவனது தாயும், பொய்யை உண்மைபோல ஆக்கி, அழகான கதை கூறுவாள். ஒருமுறை அவள் கூறிய கதையாவது:

இல்லாத ஒரு நகரம் உண்டு. அங்கு மூன்று அரச குமாரர்கள் இருந்தனர். அவர்களில் இருவர் பிறக்கவே இல்லை; மூன்றாமவன் உண்டாகவே இல்லை. அவர்கள், மேற்கொண்டு செய்யவேண்டியது யாது என நினைத்து, அந்நகர் விட்டு வெளிக் கிளம்பினர். வானத்தில் ஒரு சோலையைப் பார்த்தனர். அங்கு கிடைத்த கனிகளை உண்டு இளைப்பாறினர். அருகே மூன்று ஆறுகளைக் கண்டனர். அவை, அலையும் திரையுமாக ஓடிக் கொண்டிருந்தன. அவற்றில் இரண்டு ஆறுகளில் நீரே இல்லை. மூன்றாவது ஆறு மணல் நிறைந்ததாக இருந்தது. அந்த ஆறுகளில் மூவரும் நீராடினர். மேலும் தண்ணீர் அருந்தினர். மாலை நேரம் வந்ததும், அவர்கள் புறப்பட்டு, இனி உண்டாகப் போகும் ஒரு நகரை அடைந்தனர். அங்கு மூன்று வீடுகளைக் கண்டனர். அவற்றில் இரண்டு வீடுகள் கட்டப்படவே இல்லை. மூன்றாவது வீடு, சுவரும் மேல் மரமும் (மேங்கோப்பு) இல்லாததாயிருந்தது. அந்த வீட்டில் மூவரும் வாழ்ந்தனர். யாருமே பார்த்திராத அந்தப் பட்டணத்தில், வெளிவீட்டிலிருந்த அம்மூவரும், மூன்று தங்கப் பானைகளைக் கண்டனர். அவற்றில் இரண்டு ஓடாகவும், மற்றொன்று பொடியாகவும் இருந்தது. வடிவற்ற அந்த மூன்று பானைகளிலிருந்த மூன்று பானை அரிசியை நீக்கி, மீதமான அரிசியைக் கொண்டு உணவு சமைத்து, அதை, வயிறும் வாயுமில்லாத பல மறையவர்களுக்கு உணவாக்கினர். அம்மறையவர்களும் இந்த உணவை வயிறார உண்டனர். அதன்பின்

எஞ்சிய உணவை மூவரும் அருந்தினர். பின்னர் வேட்டைகளாடி மகிழ்ந்து வாழ்ந்தனர்.

இவ்வாறு தாய் கதை கூற, அதனைப் பாலன் நம்பிக் கேட்டான்.

"**இளமையால் நம்பினன் சிறுவன், புவனமும் இவ்வாறு அறிவிலோர் காண்பர்**" என வசிட்டர் கூறியதாக இக்கதை முடிகிறது.

**தத்துவப் பகுதி:** பிரம்ம சொரூப மாயைக்கு மிகுந்த ஆற்றல் உண்டு. அது நம் மனமாகி நம்மை எளிதில் ஏமாற்றிவிடும். நாம் எவ்வாறு ஏமாற்றப்படுகிறோம் என்பதற்கு இக்கதை எடுத்துக்காட்டாகும். பொருளற்ற, ஒரு சிறிதும் மெய்கலக்காத கதையைப் பாலன் நம்புவது போலவே, நாம் உலகு மற்றும் உலகியலை நம்புகிறோம். இக்கதையைக் குற்றமுடையது எனப் புரிந்து கொள்ளும் நாம், அதே பகுத்தறிவால், உலகியலின் குற்றத்தை உணராதது ஏன்? இதுவே, "திருஷ்டி இல்லாத மனிதன் திரிசியத்தை (காணப்படுவன) நம்புகிறான்" எனப்படுகிறது. இது நமக்கு மாயையின் வஞ்சிப்பு ஆகும். விசாரணையற்ற மனத்தை எளிதில் வஞ்சிக்கலாம் என்பதும் இதுவே. மாறாக, இவ்வுலகியலைப் பகுத்தறிபவன் பெறும் நிலையை,

**"....... புகன்மன விரிவுசங்கற்பம்**
**விவரமாமிதனால் உலகமாமிதனை விடுநிருவிகற்ப மாயிடு நீ"**

எனக் கூறப்பட்டுள்ளது.

உலகியலையும் பகுத்தறிவோமே எனத் தொடங்குபவன்,

**"காற்றிலே அசைவும் கல்லிலேதிட மும்கனலிலே**
**சுடும்வான்தனிலே**
**தோற்றலாமையும் நன்னீரிலே நெகிழ்வும் தொலைவுறு**
**மாய்விலே மாய்வும்**
**ஊற்றமாம் விதையின் மரங்களும் போல உள்ளுறை**
**பிரம்மசத்திகள் தாம்**
**ஆற்றல்சால் காலதேசசித் திரத்தால் அவனியில் சாலிபோல்**
**தோன்றும்"**

(தோற்றலாமை = ஏதுமின்மை, ஊற்றமாம் = பதிந்துள்ள, சாலி = நெற்பயிர்)

எனும் உண்மையை அறிகிறான். இத்தகையவன் மாயையின் ஆற்றலிலிருந்து விடுபடுவான். (மாயை அவனை வஞ்சிக்க இயலாது). மன சங்கற்பம் (எண்ணக் கரு) நீங்கி, உலகமும் உலகியலும் மித்தை என உணர்ந்து,

"பரமமே எங்கும்என்றும் உண்டாகும் பயின் மனத்தினால் மனமாம்
தரம்அறுபந்த முத்திபேருலகாம் சத்திகளனைத்துமாய் நிற்கும்"

எனத் தெளிவான். இத்தகையவன், மாயையும், மனமும் நீங்கிய நிர்விகற்பன்/ 'சித்' எனப்படுவான். (இவன் ஞானி)

(**பிற்குறிப்பு:** சென்ற கதையில், மனதைப் பரமார்த்திகமாக்கும் ஆற்றல் நமக்கு உண்டு எனப்பட்டது. இக்கதையில், மாயையின் ஆற்றலைப் புரிந்து கொண்டு, உலகியலை நீக்கினாலே, பரமார்த்திக (பிரம்மத்தை அறியும்) நிலை கிட்டும் எனப்படுகிறது. ஆனால், உடல் விடும் வரை உலகியலில் (வியவகாரிகம்) இருந்தாக வேண்டிய நாம், "உலகியலை நீக்குதல்" எவ்வாறு என்பதற்கான விளக்கமாவது : ஞானம் பெற்ற பின்னரும், உலகினை எதிர்கொள்ள வேண்டிய சீவன் முக்தன் பற்றி ஞான விண்மகன் கதை - தத்துவப் பகுதியில் (வரிசை எண் 4 பார்க்க) "சகநெறிகள் செய்திடினும் அந்நியர்போல் கண்டு குளிர் தன்மை சார்ந்தோர்" எனப்பட்டுள்ளது. இது நமக்கும் பொருந்தும். இதனால் "உலகியலை நீக்குதல்" என்றது நாம் உடல் விடுவதற்காக அல்ல. ஆனால் தாமரை இலைத் தண்ணீர் போல வாழ வேண்டும் என்பது தெளிவாகிறது.)

*(தொடரும்.....)*



## சித்த ஞானம் (தொடர்ச்சி)

(காப்பியக் கவிஞர் நற்றமிழ் நாவலர். நா.மீனவன்)

இறைவனை நம்புவாரும் உளர். நம்பாதாரும் உளர். இவர்கள் நம்பித்தான் ஆக வேண்டும் என்பது நமக்கான பணியன்று. அஃது அவரவர் அனுபவத்தைப் பொறுத்தே அமையும். நாடி சோதிடர் சிலர் செய்யும் செயல்களால் சில இடங்களில் சிலவிதமான தவறுகள் ஏற்படுவது உண்மையே. என் அனுபவத்தில் நான் பார்த்த வரையில் அதாவது ஏடுகளைப் பார்த்த வகையில் அறிந்தவை உண்மையே.

முந்தைய நாள்களில் வைத்தீஸ்வரன் கோவிலில்தான் இருந்தன என்பர். குன்றக்குடியைச் சேர்ந்த தெய்வநாயகம் பிள்ளையிடம் நாடி சோதிட ஏடுகள் இருந்தன. நம் சோதிடக் கட்டத்தில் 12 இராசிகள் உள்ளன. ஒவ்வொன்றையும் ஒவ்வொரு காண்டம் என்பர். இவை தவிரப் பரிகாரக் காண்டம் மருந்துக் காண்டம் போன்றவையும் உள்ளன. வருமானம் கருதி ஒவ்வொரு காண்டத்தையும் பார்க்கத் தனித் தனியாகக் கட்டணம் பெற்றனர். 1954 இல் ஒரு காண்டத்திற்கு 2 ரூபாய் வாங்கியவர்கள் இன்று ரூபாய் 300 வரை வாங்குகின்றனர். இது தவிர அறிமுகக் காண்டம் என்ற ஒன்று குன்றக்குடி தவிரப் பிற இடங்களில் உள்ளன. நாடி நூல் வாசகர் ஏடு பார்க்க வந்தவர் ஆணாய் இருப்பின் வலக்கைப் பெருவிரல் ரேகைக்கும் பெண்ணாய் இருப்பின் இடக்கைப் பெருவிரல் ரேகைக்கும் ஒரு பெயரைத் தருகிறார். பின்னர் ஏடுகளைக் கொண்டு வந்து படிக்கத் தொடங்குகிறார்.

முதற்காண்டம் முழுமையும், "நாரணியாள் நந்திதனக்கு உரைத்த மார்க்கம், நானறிந்து ஓதுகின்றேன் மச்சகேந்திரா" என்று தொடங்கி அதன் பின்னர் ரேகையின் பெயர் வரும். அப்பெயர் சரியாக இருந்தால் அடுத்துப் பெயர் முழுமையாக வரும். இல்லையெனில் வல்லெழுத்து மெல்லெழுத்து என்பன போல இனங்களைக் குறித்து வரும். அது சரியாக இருப்பின் அடுத்துப் பிறந்த லக்கினம் வரும். அது சரியாக இருப்பின் அடுத்து ராசி, நட்சத்திரம் முதலியன வரும். சில சமயங்களில் ஊரும் குறிப்பிட்டு வரும். இவையனைத்தும் சரி என்றால்

அதுதான் உங்கள் ஏடு. பின் நாடி நூல் வாசகர் அதில் உள்ளபடி ஜாதகக் கட்டங்களை நிரப்புவார். பிறகு நமது ஜாதகத்தோடு ஒப்பிட்டுப் பார்த்தால் சரியாக இருக்கும். இதில் முன்னர் நடந்தவை சொல்லப்பட்டிருக்கும். பின் நடப்பவை சில சொல்லப்பட்டிருக்கும். நல்ல பலன் இல்லையெனில் பரிகாரம் சொல்லப் பட்டிருக்கும். அதன் விவரத்தைப் பரிகாரக் காண்டத்தில் பாரக்க வேண்டும். இப்படிப் பலரை நான் கூட்டிச் சென்று காட்டியதில் அதில் சொன்னபடியே அவர்களுக்கும் எனக்கும் என் குடும்பத்திற்கும் கூட நடந்துள்ளது.

சித்தர்கள் வாழ்க்கையில் சோதிடமும் ஓர் அங்கமாக இடம் பிடித்துள்ளமையை நாம் காணலாம்.

பதினெண் சித்தர்கள் யாவர்? என்பதில் பலரிடையே கருத்து வேறுபாடு உள்ளது. அவ்வையார் ஒரு சித்தர் எனக் குறிப்பிடுவார் உளர். சங்ககாலத்து அவ்வையோ ஆத்திசூடி பாடிய அவ்வையோ எவ்விதமான சித்துக்களைச் செய்தனர் என்பதற்கான குறிப்புகள் இல்லை. அவ்வையார் பாடிய பலவற்றால் நிகழ்ந்த நிகழ்வுகளை வைத்து அதனை சொற்பலிதம் என்று சொல்லலாமே தவிரச் சித்தர் வரிசையில் சேர்க்க இடம் தராது. அப்படிச் சேர்த்தால் அவ்வாறே சொற்பலிதமுள்ள கவி காளமேகத்தையும் ஒரு சித்தர் என்றுதான் சொல்லத் தோன்றும்.

வடலூர் வள்ளலாரையும் ஒரு சித்தர் என்றே சொல்லுவர். அதையும் நாம் மறுப்பதற்கு இல்லை. அவர் சித்தராயினும் சித்து விளையாட்டில் அதிக நாட்டம் கொள்ளவில்லை. அவ்வப்போது சில நேரங்களில் செய்து காட்டியதோடு சரி. சித்து விளையாட்டில் அதிகம் ஈடுபட்டால் ஈட்டிய தவத்தின் ஆற்றல் குறையும் என்பது அவருடைய நம்பிக்கை. நந்தீசர், இராம தேவர், கருவூரார், சேஷயோகியார், திருவள்ளுவர், சட்டைமுனி, கணபதி சித்தர், அகத்தியர், உரோமரிஷி, சுப்பிரமணிய சித்தர், வான்மீகி, காகபுசண்டர், காக்கைச் சித்தர், சித்தர் சூரியானந்தர், பட்டினத்துச் சித்தர், காரைச் சித்தர், தடங்கண் சித்தர், கோரக்கர் போன்ற சித்தர்கள் பலர் இருந்தனர் என்பதற்கான குறிப்புகள்

நிறைய உள்ளன. பெரும்பாலான சித்தர்கள் மருத்துவ ஆய்விலும் யோகக் கலையிலும் அதிகமான நாட்டம் கொண்டவர்களே. நகரத்தார் தமை நாடி இங்கு வந்த கோட்டூர்ச் சுந்தர சுவாமிகள் மேற்படி நகரத்தார்களின் உதவியோடு ஒன்பது சிவாலயங்களைக் கட்டி அந்த ஒன்பது சிவாலயங்களுக்கும் ஒரே நாளில் ஒரே நேரத்தில் திருக்குட நன்னீராட்டு விழாவை நடத்தியதோடு அந்த ஒன்பது சிவாலயங்களிலும் ஒரே நேரத்தில் காட்சி கொடுத்த பெருஞ்சித்தர். அவர் வடலூர் வள்ளலார் தம்மைவிடப் பெருஞ்சித்தர் என்று கூறியுள்ளார். இவருடைய சமாதி ஆலயம் அதாவது அதிட்டானம் நகரத்தார் ஊரில் ஒன்றான அரிமளத்தில் உள்ளது. இப்படிச் சித்தர்கள் வாழ்வில் பல அற்புத நிகழ்வுகள் உலக நன்மை கருதி நடந்துள்ளன.

"ஒன்றே கடவுள் ஒருவனே தேவன்" என்ற சமயப் பொதுமையை உலகுக்கு முதலில் அறிவித்தவர் திருமூலரே. அவர் எழுதிய திருமந்திரம் நமது உடலும் உயிரும் நலம்பெற யாத்த நூல். மனிதனைப் புனிதனாக்கும் சிந்தனை நெறிகளை நமக்குச் செப்பியவர் யோகக் கலையை - நீண்ட நாள் வாழ வைக்கும் பிராணாயாமக் கலையைத் தெளிவாகச் சொன்னவர் திருமூலர். இவரைப் பின்பற்றி இவருடைய அடிச்சுவட்டில் சென்றவர் சிவ வாக்கியர். இவருக்கு முன்னோடிதான் திருமூலர்.

"உள்ளம் பெருங்கோயில் ஊன்உடம்பு ஆலயம்
வள்ளல் பிரானார்க்கு வாய்கோ புரவாசல்
தெள்ளத் தெளிந்தார்க்குச் சீவன் சிவலிங்கம்
கள்ளப் புலன்ஐந்தும் காளா மணிவிளக்கே"

இப்பாட்டில் நம் உடம்பையே ஓர் ஆலயமாக உருவகிக்கிறார் திருமூலர். உள்ளமே இறைவனின் இருப்பிடம் என்று திருமூலர் கூறுவதை உணர்ந்த சித்தர் சிவவாக்கியர்

அண்டர்கோன் இருப்பிடம் அறிந்து உணர்ந்த ஞானிகள்
பண்டு அறிந்த பான்மை தன்னை யார்அறிய வல்லரே?
விண்ட வேதப் பொருளை அன்றி வேறுகூற வகைஇலாக்
கண்டகோவில் தெய்வம் என்று கைஎடுப்பது இல்லையே

என்று கூறுவார்.

உள்ளம் ஆகிய கோவிலில், உள்ள சோதியை உணரவியலா மாந்தர்களின் நிலைபற்றிச் சொல்ல வந்த சிவவாக்கியர்

ஓடி ஓடி ஓடி ஓடி உட்கலந்த சோதியை
நாடி நாடி நாடி நாடி நாள்களும் கழிந்துபோய்
வாடி வாடி வாடி வாடி மாண்டு போனமாந்தர்கள்
கோடி கோடி கோடி கோடி எண்ணிறந்த கோடியே

என்று பாடுகிறார். இறைவனின் திருவடியை அடைய விரும்புவோர் செய்ய வேண்டியது என்ன? கடுந்தவம் செய்து கடவுளை அடைய முயல்வதை விட எளிய வழியொன்றினை இயம்புகின்றார் சிவவாக்கியர். உருவமாய்த் திரியும் நாடியில் ஒடுங்கியுள்ள காற்றினை நெஞ்சிலே நிறுத்தி மேலேற்ற முயல்வோர் வயதான போதும் இளமையைப் பெறலாம். உடல் சிவக்கும். இறைவன் இறைவி இவர்கள் ஆணையாய் இவ்வுண்மையைச் சொல்கிறேன் என்று சொல்லும் சிவவாக்கியர் பாடல்

உருத்தரித்த நாடியில் ஒடுங்குகின்ற வாயுவைக்
கருத்தினால் இருத்தியே கபாலம் ஏற்ற வல்லிரேல்
விருத்தரும் பாலர் ஆவீர் மேனியும் சிவந்திடும்
அருள்தரித்த நாதர் பாதம் அம்மை பாதம் உண்மையே

*(தொடரும்....)*

## அரிவாட்தாய நாயனார் - ஆனாயநாயனார் பக்தி வெளிப்பாடு

(முனைவர் இரா. கீதா, உதவிப் பேராசிரியர்,
இராமசாமி தமிழ்க்கல்லூரி, காரைக்குடி)

**முன்னுரை:**

"நிறைமொழி மாந்தர் ஆணையிற் கிளந்த
மறைமொழி தானே மந்திரம் என்ப" (தொல்.1434)

என்ற தொல்காப்பியரின் கூற்றுப்படி தேவாரங்கள் பல மந்திரங்களே என்பதில் எள்ளளவும் சந்தேகமில்லை. கி.பி.7ஆம் நூற்றாண்டு முதல் 12ஆம் நூற்றாண்டு வரை உள்ள இடைப்பட்ட ஐந்து நூற்றாண்டுகள் பக்தி இலக்கியக்காலம் என்றால் அது மிகையில்லை.

சேக்கிழார் பெருமான் இயற்றிய பெரியபுராணம் என்னும் திருத்தொண்டர் புராணம் சைவ சமய இலக்கியங்களின் முடிமணியாக விளங்குகின்றது. பொதுவாகத் தமிழ்மொழி பல வகையில் சிறப்புப் பெற்றுள்ளது. ஆங்கிலத்தை வணிகத்தின் மொழி என்றும் இலத்தினைச் சட்டத்தின் மொழி என்றும் அழைப்பதைப் போலத் தமிழைப் பக்தியின் மொழி என்று அழைப்பார் தனிநாயக அடிகள். மேலும், சமயம் சார்ந்த பக்திப் பாடல்களின் தொகுப்பினைத் தமிழ்மொழிபோல் வேறு எந்த மொழியும் பெறவில்லை என்பது உண்மை.

**பக்தி - விளக்கம்:**

'இறைவழிபாடு' என்னும் பொருளமைந்தது 'பக்தி' என்னும் சொல். இச்சொல் தொல்காப்பியர் சுட்டும் சுவை எட்டினைப் போல 'பக்திச் சுவை' என்னும் ஒன்பதாவது சுவை என்பது பொருந்தும். இதனை,

"பக்திச் சுவை நனி சொட்டச் சொட்டப்
பாடிய கவி வலவ"

என்று மகாகவி மீனாட்சி சுந்தரம் பிள்ளை தமது சேக்கிழார் பிள்ளைத்தமிழில் கூறுகின்றார்.

**சிவனடியார்கள்:-**

சிவபெருமான் மீது பக்தி செய்யக்கூடிய அடியார்கள் தன்னலமற்றவர்கள், பிழையற்றவர்கள், பிறப்பாலும் இடத்தாலும் குடியாலும் எவ்வகையிலும் உயர்வு தாழ்வு காணமுடியாதவர்கள். எனவேதான் எல்லா நிலைமக்களும் நாயன்மார்களாகத் திகழ் கின்றார்கள். இறைவன் முன் அனைவரும் சமமே என்பதைச் சேக்கிழார் இதன் மூலம் முன்னிறுத்துகின்றார். மனிதர்கள் வாழ்வில் தீமை செய்யாமல் வாழலாம். முடியும். ஆனால், தன் நினைவில் கூடத் தீமை செய்யாமல் வாழ வேண்டும் என்பது கடினம். பிறருக்குத் தீமை விளைவிக்க வேண்டும் என்று எண்ணுவது கூட வன்மம் என்பர் சான்றோர். அந்தப் பண்பினைக் கொண்டு வாழ்ந்தவர்கள் நாயன்மார்கள். இறைபக்தி ஒன்றையே வாழ்க்கைக் குறிக்கோளாகவும், எப்பொருள் மீதும் பற்று இன்மையினாலும் தீயவற்றைக் கனவிலும் கருதாதவர்களாக வாழ்ந்தனர். நாயன்மார்கள் சிவபெருமானையே உணவாகவும், உயிராகவும் கொண்டு வாழ்ந்தவர்கள்!

இக்கட்டுரையில் காணவிருப்பவர்கள் அரிவாட்தாய நாயனாரும் ஆனாய நாயனாரும் ஆவார்கள்.

**அரிவாட்தாய நாயனார்:**

தை மாதத்தில் திருவாதிரை நட்சத்திரத்தில் வேளாளர் குலத்தில், சோழநாட்டுக் கணமங்கலம் என்னும் ஊரில் பிறந்தவர். இயற்பெயர் - தாயனார் என்பது.

**ஊர்வர்ணனை:**

கணமங்கலம் என்னும் ஊர் மிக்கவளமிக்கது. அவ்வூர் காவிரி ஆறு பாயும் சிறப்புடையது. "கரும்பு தேன் பொழியுங் கணமங்கலம்" என்று சிறப்பிக்கின்றார் சேக்கிழார். அதாவது நன்கு விளைந்த கரும்பின் வெடிப்பிலிருந்து தேன் சொரியும் வளமிக்க ஊர் என்று வர்ணனை செய்கின்றார் ஆசிரியர். மேலும் செந்நெல் பயிர்கள் நிறைந்த வயல்கள் காணப்படும் ஊர். அங்ஙனம் செந்நெல் பயிர்கள் நிறைந்த வயல்களில் களை என்று எண்ணிப் பறித்து வீசியெறிந்த தாமரை மலர்களை, உழவர்கள் கையில் ஏந்துகின்ற அவர்கள் பங்கைய மாநிதி (பதுமநிதி) என்ற திரவியத்தை ஏந்திய தேவர்கள் போல விளங்குகின்றார்கள் என்கிறார் சேக்கிழார் பெருமான். இதனை

"செந்நெல் ஆர்வயல் கட்டசெந் தாமரை
முன்னர் நந்துமிழ் முத்தஞ் சொரிந்திட
துன்னு மள்ளர்கைம் மேற்கொண்டு தோன்றுவார்
மன்னு பங்கய மாநிதி போன்றுளார்".

என்னும் பாடல் விளங்குகின்றது.

**அரிவாட்தாயனாரின் திருப்பணி:**

சிவபெருமானுக்குத் தினமும் செந்நெல் அரிசியின் இனிய சோறு, செங்கீரை, மாவடு ஆகியவற்றைக் கொண்டு ஒவ்வொரு நாளும் அமுது படைக்கும் பணியினைச் செய்து வருகின்றார். இத்திருத்தொண்டினைத் தனக்குத் துன்பம் வந்த காலத்தும் இடைவிடாது செய்து கொண்டிருந்தார். அப்படிப்பட்ட தாயனாரை வேத முதல்வனான சிவபெருமான் தன்னிடத்தே வைக்க எண்ணினார். எனவே அவருக்கு வழிவழியாக வந்த செல்வங்களைப் போன வழி தெரியாமல்

மறைக்கின்றார். கடுமையான வறுமையினைச் சந்திக்கின்றார் தாயனார்.

**தாயனாரின் மன உறுதி:**

எத்துணை துன்பம் வந்தபோதும் மனதில் சிறிதும் தளராமல் தான் செய்து வந்த தொண்டினைக் கைவிடவில்லை. கூலிக்கு நெல் அறுக்கச் சென்று தனக்குக் கிடைத்த செந்நெல்லினைச் சிவபெருமானுக்கும் கார்நெல்லைத் தங்களுக்கும் என்று உண்கிறார்கள். மேலும் சோதிக்க எண்ணிய சிவபெருமான் ஊர் முழுவதும் செந்நெல்லே விளையும்படி அருள் புரிகின்றார். மிகவும் மகிழ்ந்த தாயனார் இடைவிடாமல் தனது பணியினைச் செய்துவந்தார். கூலியாகக் கிடைத்த செந்நெல் முழுவதையும் இறைவனுக்கே படைத்துவிட்டுத் தானும் தன் மனைவியாரும் வீட்டுத் தோட்டத்தில் விளைந்த கீரையினை உண்கிறார்கள். சில நாட்களில் அதுவும் இல்லாமற் போகத் தண்ணீரை மட்டும் உணவாக உட்கொண்டு சிவபெருமானுக்குச் செய்யும் திருத்தொண்டினைச் செய்து வந்தார்க்ள. இதனை

வைகலும் உணவிலாமை மனைப் படப் பையினிற் புக்கு
நைகரம் இல்லாஅன்பின் நங்கை கைஅடகு கொய்து
பெய்கலத்து அமைத்து வைக்கப் பெருந்தகை அருந்தத் தங்கள்
செய்கடன் முட்டா வண்ணம் திருப்பணி செய்யும் நாளில்

என்னும் பாடல் விளக்குகின்றது.

**தாயனாரின் மனைவியார்:**

அந்த நிலையிலும் அன்பு குறையாத மனைவியார் தாயனாருக்கு உறுதுணையாக நின்றார். அவரைச் சேக்கிழார் அருந்ததி போன்ற கற்பினை உடையவள் என்று போற்றுகின்றார். கணவர் செல்லும் வழி ஒன்றினையே பின்பற்றி வாழ்ந்தார் அவர்.

**சோதனைக் காலம்:**

உணவு அருந்தாமல் இருந்ததினால் உடல் சோர்வுற்றார் தாயனார். வழக்கம்போல் அன்றும் சிவபெருமானுக்குத் திருவமுது படைக்கச் செல்கின்றார். வழியில் கால் தடுமாறுகின்றது. கீழே விழப்

போகின்றார். விழப்போன அவரை மனைவியார் தாங்கிப் பிடிக்கின்றார். அப்பொழுது தான் கொண்டு வந்த திருவமுது நில வெடிப்பில் கொட்டி விடுகின்றது. தாயனார் பதறுகின்றார். இதனை

"எல்லையில் தீமையேன் இங்கெய்திடப் பெற்றிலேன்"
என்று "ஒல்லையில் அரிவாள் பூட்டி ஊட்டியை அரியலுற்றார்"
என்ற பாடலடி உணர்த்தி நிற்கின்றது.

தம்பிறப்பினை அரிவார் போன்று தன் கழுத்தினை அரிய முற்படுகின்றார். தம் கழுத்தினைத் தானே அரிய முற்பட்ட தாயனார் மாசறு சிந்தை உடையவர். அங்ஙனம் அரிந்தபொழுது அரிவாள் முன் கழுத்திலிருந்து பின் கழுத்தினை நோக்கிச் செல்கின்றது. தாயனாரின் இச்செயலினைத் தடுக்க அம்பலத்தாடுவானின் இடக்கை நிலவெடிப்பிலிருந்து வெளிவருகின்றது. அதே நேரத்தில் மாவடுவினைக் கடிக்கும் போது எழும் ஓசையான 'விடேல் விடேல்' என்ற ஓசையும் ஒரு சேர வெளிவருகின்றது.

**ஆட்கொண்டருளல்:**

பூமியிலிருந்து தோன்றிய இறைவனின் திருக்கை கழுத்தினை அரிந்து கொண்டிருந்த நாயனாரின் கையைப் பிடித்து நிறுத்தியது. தம்மைக் காத்து அருள்செய்த அருட்பெருங் கருணையினை இருகையினையும் கூப்பி வணங்கினார் தாயனார். அடியேனின் அறிவில்லாத தன்மையினை மன்னிக்குமாறு வேண்டுகின்றார்.

சிவபெருமான் காளைவாகனராய்க் காட்சி தருகின்றார்.
"நன்று நீ புரிந்த செய்கை நன்னுதலுடனே கூட
என்றும் நீ உலகில் வாழ்வாய்!"
என்று அருள் புரிகின்றார். தாயனாரின் பின் நின்றதால் தாயனாரின் மனைவியாரும் சிவலோகத்தில் தன் கணவருடன் வாழும் அருட்பேற்றினைப் பெறுகின்றார். அமுது செய்ய இயலவில்லை என்று வருந்தி அரிவாளால் தன் கழுத்தினை அரிந்து கொண்டதால் அரிவாட்தாய நாயனார் என்ற தூய பெயரினைப் பெற்றார் தாயனார்.

*(தொடரும்...)*

# கோயிலூர்ப் புராணம்

## (கொற்றவாளீசப் படலம்) (தொடர்ச்சி)

மறைஓ திமன்நே டியும்காணா
முடியாய் போற்றி வனத்துழாய்
இறையோன் முயன்றும் காணாத
அடியாய் போற்றி இரும்புவனம்
குறைதீர் தரஉண்(டு) உவக்கும்ஒரு
கொடியாய் போற்றி பெருங்கருணை
நிறைவே எவரும் தொழுதேத்து
நெடியாய் போற்றி போற்றியே 18

அனந்த முடியாய் நினைத்தொழுதேன்
அனந்தம் அடியாய் நினைத்தொழுதேன்
அனந்த முகத்தாய் நினைத்தொழுதேன்
அனந்த விழியாய் நினைத்தொழுதேன்
அனந்த உருவாய் நினைத்தொழுதேன்
அனந்த வாயாய் நினைத்தொழுதேன்
அனந்தம் பெயராய் நினைத்தொழுதேன்
அனந்தம் புகழாய் நினைத்தொழுதேன் 19

கால காலா நினைத்தொழுதேன்
காம தகனா நினைத்தொழுதேன்
பால விழியாய் நினைத்தொழுதேன்
பரசு பாணி நினைத்தொழுதேன்
ஏல நறுந்தார்க் குழல்உமையை
இடப்பால் உடையாய் நினைத்தொழுதேன்
சீல முனிவர் உளத்(து)அமரும்
தேவ தேவா நினைத்தொழுதேன் 20

வான்ஆர் நறுங்கற் பகமாலை
மகவான் இண்டை மலர்மேலான்
தேன்ஆர் சுரும்பர் உளர்துளபச்
செழுந்தார் மார்பன் பரிதிமதி
ஊன்ஆர் படைக்கைத் தானவர்கிம்
புருடர் ஒளிர்விச் சாதரர்மற்(று)
ஆனார் பலரும் தொழு(து)ஏத்தும்

அண்ணால் யானும் நினைத்தொழுதேன் 21

மாலோர் கணையாய் நினைத்தொழுதேன்
மாலோர் புறத்தாய் நினைத்தொழுதேன்
மாலோர் விடையாய் நினைத்தொழுதேன்
மாலோர் கொடியாய் நினைத்தொழுதேன்
மாலோர் மனையாய் நினைத்தொழுதேன்
மாலோர் வடிவாய் நினைத்தொழுதேன்
மாலோர் நடுவாய் நினைத்தொழுதேன்
மாலோர் உணராய் நினைத்தொழுதேன் 22

மறைஆ தனத்தாய் உனைஅடைந்தேன்
மறைப்பா துகையாய் உனைஅடைந்தேன்
மறைமா உகைப்பாய் உனைஅடைந்தேன்
மறைக்கோ வணத்தாய் உனைஅடைந்தேன்
மறைமா மொழியாய் உனைஅடைந்தேன்
மறைநூ புரத்தாய் உனைஅடைந்தேன்
மறைவான் பொருளே உனைஅடைந்தேன்
மறைஈ(று) உணராய் உனை அடைந்தேன் 23

பண்ணே பண்ணின் உள்இசையே
பாட்டே பாட்டின் உட்பொருளே
கண்ணே கண்ணின் உள்மணியே
கனியே கனியின் உட்சுவையே
எண்ணே எண்ணின் உட்பொருளே
எழுத்தே எழுத்தின் உள்ளீடே
விண்ணே விண்ணின் உள்ஒளியே
விரும்பி அடியேன் நினைஅடைந்தேன் 24

எல்லாத் தொழிலும் உடையவனாய்
இருந்தும் தொழிலொன் றேனும்இலாய்
எல்லா உருவும் உடையவனாய்
இருந்தும் மெய்ஒன் றேனும்இலாய்
எல்லாப் பெயரும் உடையவனாய்
இருந்தும் பெயர்ஒன் றேனும்இலாய்
எல்லா உலகும் தொழுமுதல்வ
யானும் ஏத்தி உனைத் தொழுதேன் 25

புகழ்ஈ சான நினைத்தொழுதேன்
பொலிதற் புருட நினைத்தொழுதேன்
திகழ்அ கோர நினைத்தொழுதேன்
வாம தேவ நினைத்தொழுதேன்
நிகழ்பேர் உவகைச் சத்தியோ
சாத மூர்த்தி நினைத்தொழுதேன்
அகழ்வார் அவித்தை யாளர்உளத்(து)
அமர்மா தேவ நினைத்தொழுதேன் 26

என்று துதிக்கும் செழியன்எதிர்
இலிங்கம் நின்று வெளித்தோன்றிக்
கன்று மழுவாள் கரத்(து)இலங்கக்
கங்கா நதியும் மதியும்மிகத்
துன்று சடைக்காட்(டு) இடைவிளங்கச்
சூலம் கபாலம் பொலிந்தொளிர
ஒன்று புவனம் ஒருங்(கு)ஈன்ற
உமையாள் இடப்பா கம்பொலிய 27

மாலும் அயனும் இருபாலும்
மலர்க்கை தலைமேல் குவிந்(து)இறைஞ்சச்
சாலும் முனிவர் அரகரஎன்(று)
எடுக்கும் ஓசை தலைசிறப்பக்
கோலும் அடியார் உளங்குழைந்து
குழைந்து விழைந்து கூத்தாட
மேலும் அமரர் பறித்(து)இறைக்கும்
மென்பூ மாரி புவிநிறைய 28

வானம் சமழ்க்கும் இயம்ஐந்தும்
வானோர் செவிபோர்த் திடமுழங்கக்
கானம் சுமந்த நறுங்கடுக்கைக்
கண்ணி மணம்எண் திசைதடவ
ஊனம் சுமத்தல் இல்லாத
உயர்மா கதர்கள் புகழ்ந்தேத்த
நீல்நஞ்(சு) உயிர்க்கும் படப்பணிகள்
நிரம்பி மார்பத்(து) இடைப்புரள 29

எண்இ லாத இளங்கதிரின்
இமைக்கும் மேனி அழ(கு)எறிப்ப
எண்இ லாத மதிஉ தயம்
என்னக் குளிர்ச்சி தலைதூங்க
எண்இ லாத பெருவலிசால்
இடப ஊர்தி வெரிந்புறத்(து)உற்(று)
எண்இ லாத பெருங்கருணை
எம்மான் காட்சி கொடுத்தனனே 30

கனவின் இடத்து மயன்முதலோர்
காண்டற்(கு) அரிய பெருங்காட்சி
நனவின் இடத்து வெளிப்படலும்
நயந்து பணிந்து பணிந்(து)எழுந்து
சினவில் அரசன் பரவசனாய்த்
திருமுன் குடந்தம் பட்டுநிற்ப
மனவின் இடைஏ னத்தின்ஒரு
மருப்புப் புனைவார் அருள்செய்வார் 31

வாராய் வீர பாண்டியனே
மாறாது நினது பத்திமையும்
ஆராப் பெருநீ தியும் உலகம்
அறியத் தெளிப்பான் ஒருமானைப்
பாராய் தாம்முன் வெளிப்படுத்திப்
பக்கத்(து) இருந்த வாள்கவர்ந்து
போராய் புலியும் மறையோனும்
புணர்த்தி விடுத்தோம் நாம்கண்டாய் 32

அள(வு)இல் உவகை யாம்அடைந்தோம்
அடங்கார் நடுங்கு நின்வடிவாள்
அள(வு)இல் ஒளிநம் குறியொருபால்
அரு(கு)உற்(று) எடுத்துக் கொள்ளுதிநீ
அள(வு)இல் வரங்கள் வேண்டிடினும்
தருவோம் அறைவேண் டுவ(து)என்ன
அள(வு)இல் வலியால் அருளியவர்
அன்பின் நிலத்தில் பணிந்(து)எழுந்து 33

வெய்ய வடிவாள் கரத்(து)எடுத்து
மீட்டும் பணிந்து பணிந்(து)எழுந்து
செய்ய மேனிச் சிவக்கொழுந்தே
தேவ தேவ சிற்றடியேன்
உய்ய அளிக்கும் பெருங்கருணைக்(கு)
ஒப்(பு)ம் உளதோ எனத்துதித்து
வைய நிகழும் பெருவரங்கள்
மாறா அன்பின் வேண்டுவான் 34

முற்ற அடியேற்(கு) உன்அடிக்கீழ்
முழங்கும் பத்தி உறல்வேண்டும்
அற்றம் அகல நினைவன்னி
அடியான் கண்ட காரணத்தால்
செற்றம் ஒழிக்கும் வன்னிவனம்
எனும்பேர் இதுசேர் தரல்வேண்டும்
கற்ற முனிவர் புகழ்க்கருணைக்
கடலே இன்னும் கேட்டியால் 35

ஆ(சு)இல் கொற்ற வாள்நின்பால்
அடியேன் பெறலால் கொற்றவாள்
ஈசன் எனும்ஓர் திருநாமம்
என்று நினக்(கு)எய் திடல்வேண்டும்
மா(சு)இல் இனைய பெருந்தவத்தை
மருவி மதுப்பொய் கையில்தோய்ந்து
பேசும் இனிய வெண்நீறு
பூசிப் பெருங்கண் மணிபூண்டு 36

உண்மை அறி(வு)ஆ நந்தமாய்
ஒளியாய் விளங்கும் நினைஅளவாத்
தண்மை செறிந்த குணத்(து)உமையாள்
தனைக்கண்(டு) அன்பில் போற்றிடுவார்
வண்மை மிகுந்த பெரும்போகம்
மருவிப் பிரம ஞானம் உறீஇ
எண்மை அவித்தை தவிர்ந்(து)ஒருநீ

யேயாய் அமர்தல் வேண்டுமால் 37
இந்த வரங்கள் முழுதும்அளித்
திடுதல் வேண்டும் எனப்பணிய
வந்த வரங்கள் அவ்வாறே
அனைத்தும் அருளி அங்கணன்அச்
சந்த லிங்கத் தூண்மறைந்தான்
தருக்கும் பகைவர் முடித்தலைகள்
சிந்த வடிவாள் கொடுசெகுப்போன்
தேங்கும் உவகைக் கடல்படிந்தான் 38

அன்று முதலா அத்தலத்தை
ஆன்றோர் வன்னி வனம்என்றும்
குன்று குழைமுப் புவனேசன்
தன்னைக் கொற்ற வாள்ஈசர்
என்றும் விளங்க எடுத்(து)உரைப்பார்
இந்த நாமம் கணிப்போர்கள்
பொன்றும் வறுமைக் கடல்நீந்திப்
புத்தி முத்தி அடைவாரால் 39

இவ்வா(று) அமல னார்அருள்பெற்(று)
இரியா(து) அங்கண் அமர்கின்ற
தெவ்வா னவர்தம் முடிஇடறும்
கழற்கால் செழியன் அமைச்சர்பிறர்
ஒவ்வா னைஏ யோர்க்கூவி
ஒருங்(கு)இக் காடு களைந்துதளி
எவ்ஆ லயமும் சமழ்ப்பஇயற்
றிடுமா புரிமின் எனப்பணித்தான் 40

## வேறு

மதிவலி அமைச்சர் ஆதி மற்றையோர் பிறரும் கூடிக்
கொதிவலி நவியம் வெள்வாய்க் குயம்உளார் பலரைக் கூவிப்
பொதிமலி இனைய கானம் புரைஅறப் போக்கும் என்று
நிதிமலி உவகை விம்ம நிரப்பினார் அனைய காலை 41

*(தொடரும்...)*

## கோவிலூர் ஆண்டவர் அருளிய
## சுபானுபவத் திருவாக்கு (தொடர்ச்சி)
### (சாது மெய்யப்ப ராமசுவாமி, கோவிலூர் மடாலயம்)

(குறிப்பு : சுபானுவத் திருவாக்கு நூலிற்கான இலக்கண நெறி (சம்பிரதாய இலட்சணம்), இந்த இதழில் கூறப்படுகிறது. இதனோடு தொடர்புடையதான 'கோவிலூர் மரபு' பற்றியும் குறிப்பிடப்படுகிறது. ஆனால், மரபு முன்னோடிகளான தத்துவ தரிசனங்கள், மதங்கள், தத்துவ-மத வேற்றுமைகள் பற்றி முன்னமே இம்மடாலய வெளியீடுகள் உள்ளமையால், அவை தவிர்க்கப்பட்டுள்ளன.)

**நூல்நெறி :**

1. பாயிரம்/காப்பு (மங்களாசரணை) :
   உபாசனா மூர்த்தி - திருநெல்லை - சைவ வழிபாடு
2. பேசும் பொருள் (விஷயம்) :
   கேவலாத்துவிதம் - முழுமுதல் பரம்பொருள் பிரம்மம்
3. அறிதகுதி (அதிகாரி):
   கோவிலூர் மரபு - உலகியல் துன்ப நீக்கத்திற்காக அத்துவிதம் கற்கும் விருப்பமுடையவன்.
4. நூற்பயன் (பிரயோஜனம்) :
   வீடுபேறு (முக்தி)
5. ஆக்கம் (கர்த்தா) :
   முத்துராமலிங்க ஆண்டவர் - கோவிலூர் மரபு

**நூற்காலம் :**

பல நூற்றாண்டுகளுக்கு முன்பிருந்தே சைவ சித்தாந்தம் தமிழகத்தே கற்பிக்கப்பட்டுள்ளது. இதேபோல உபநிடத சித்தாந்தங்களைத் தமிழில் கற்க விரும்பியோரும் இருந்துள்ளனர். ஆனால், வர்ணாச்ர தர்ம வேறுபாட்டாலும், வடமொழியிலேயே உபநிடதம் கற்பிக்கப்படவேண்டுமெனக் கருதப்பட்ட நியதியாலும் அப்போது இதற்கான குருமார்கள் கிடைக்க வில்லை. ஆதலால், தமிழ்வழி உபநிடதம் கற்றல் இயலாததாயிற்று. மேலும் இரண்டாம் இராசேந்திர சோழன் காலத்தே, 'குகை இடி கலகம்' மூலமாக, மறைமுகமாக மறைநூல்களைத் தமிழில் கற்றல் தடுக்கப்பட்டது.

அதே போதில், பரம்பொருளை அறிதலென்பது, உடல் மன மொழிகளைக் கடந்த உணர்வுநிலை எனச்சாற்றும் தத்துவ வாதியர்களே உடல்காரணமாகப் பிரிக்கப்பட்ட தர்மங்கள் மற்றும் மனதிற்குட்பட்ட மொழி ஆகியவற்றை முன்னிலைப் படுத்தி, எங்களைப் படைத்தவரை நாங்கள் தெரிந்து கொள்ள விரும்புவதைத் தடுக்கலாமா என்றும், எல்லா மொழிகளுமே இறைவனின் படைப்புத்தானே, இறைவனை எம்மொழியால் அறிய இயலாதா எனவெல்லாம் விசாரணைகள் மேற்கொள்ளப்பட்டன.

சிவப்பிரகாசர், சொரூபாநந்தர், தத்துவராயர் எனும் பரம்பரையைச் சேர்ந்தோர், இக்கருத்தை ஏற்ற இருமொழி வல்லுநராவர். தத்துவராய சுவாமிகள் ஏறத்தாழ கி.பி. 1335இல் வாழ்ந்தவரெனக் குறிப்பிடப்பட்டுள்ளது(1). சுவாமிகளின் வரலாறு எழுதப்பட்டுள்ளது. முதன்முதலில் உபநிடதக் கருத்துக்களைத் தமிழ்ச் செய்யுள்களாக ஆக்கியவர் இவரே எனத் தெரிகிறது. தாண்டவராய சுவாமிகளால் (1408 - 1534) இயற்றப்பெற்ற கைவல்ய நவநீதம், புகழ்பெற்ற தமிழ் நூலாகும். இது உபநிடத சாரம் எனப் போற்றப்படுகிறது. சுவாமிகள், சிருங்ககிரி , மரபினர் (2).

இவ்வாறு, சிருங்ககிரியின் பன்னிரண்டாம் பீடாதிபதியான, ஸ்ரீ வித்யாரண்ய சங்கராச்சார்யர் தொடங்கிய "அத்துவிதம் - தமிழில்" எனும் நெறி போற்றுதற்குரியது. வித்யாரண்ய சுவாமிகளின் வழித் தோன்றிய சுப்பிரமணிய தேசிகரால் தமிழ்வழி வேதாந்தம் கற்பிக்கப்பட்டது.

**கோவிலூர் மரபு:**

சுப்பிரமணிய தேசிகர், நயின தேசிகர், அழகப்ப தேசிகர், வீரபத்திர தேசிகர், முத்தையா தேசிகர், உகந்தலிங்க தேசிகர், முத்துராமலிங்க ஞான தேசிகர் எனும் குரு பரம்பரை (3), கோவிலூர் மரபின் முன்னோடியாகும்.

முத்துராமலிங்க ஞான தேசிகர் என்னும் கோவிலூர் ஆண்டவர் காலத்தே 14 தமிழ் நூல்களில் சற்றேறக்குறைய 4000 செய்யுள்கள் அடங்கிய வேதாந்தம் பாடத்திட்டம் உண்டாக்கப்பட்டது. இந்நெறிக்கான பாடம் கற்பித்தல் மற்றும் கேட்டல் முறைப்பாட்டிற்கு சீடாச்சாரம் (4) எனப் பெயர். இது குருகுல முறையாகும்.

"தன்னைத் தவிர ஏனைய அனைத்தும் துறக்கத் தக்கன" எனும் கருத்தை ஏற்பவர்கள் உலகியலை எப்போதுமுள்ள உண்மை எனக் கருதமாட்டார்கள். இது மனத் துறவாகும். ஆனால், இந்நிலையடைந்த பின்னரும், அவர்கள் உலகில் வாழவேண்டி வரலாம். இத்தகையோர், உடல் அடையாளங்கள், மத அடையாளங்கள், வர்ணாச்ரம தர்மம், அநுஷ்டானங்கள் ஆகியவற்றில் உதாசீன முறுவர். இந்நிலை 'ச்ரௌதம்' (5) எனப்படுகிறது. இவர்கள், "தானம், மந்திரம், விரதம், வேள்வி" போன்றவற்றால் பாவநீக்கம் பெற இயலாது எனவும், "பிரமன் முதலான பற்பல தேவரும், புண்ணிய தீர்த்தங்களும், தேசம், காலம், நான்மறை, அவற்றின் ஆறு அங்கங்களும், தவம்களும் கூட, பேருண்மை அல்ல (அசத்யம்)(6) எனவும் அறிகிறார்கள்". இத்தகைய மனத்துறவு நிலையினையே 'கோவிலூர் மரபு' எனக் கோவிலூர் ஆண்டவர் ஏற்றார். இவ்வாறு, கோவிலூர் மரபு என்பது தத்துவம் எனவும், இது மதமல்ல எனவும் உறுதி செய்யப்படுகிறது.

மேற்கூறிய உபநிடதக் கருத்துக்களை 'கேவலாத்துவிதம்' எனலாம். சங்கர பகவத்பாதரால் நெறிமுறைப்படுத்தப்பட்ட அத்துவிதம் இதுவாகும். அத்துவிதத்தில், உபநிடதங்களையே முதன்மை அளவை நூல்களாக (பிரமாணம்) ஏற்பர். பிரம்மம் பற்றிக்கூறும் வழிநூல்கள் (சும்ருதிகள்) மட்டும் ஏற்கப்படலாம். ஆனால், புராணங்கள், இதிகாசங்கள், ஆகமங்கள், தர்ம சாத்திரங்கள் போன்றவை, தம்முள் வேறுபடுவதாலும், மதசம்பந்தமுறுவதாலும், பிரமாணங்களாகக் கருதப்படுவதில்லை.

வடமொழி அறியாதோரும் கூடத் தத்துவம் கற்கவேண்டும் எனும் பெருங்கருணையால், 'பிரகரண கிரந்தங்கள்' வாயிலாக இம்மரபு தொடர்கிறது. 'வடமொழி மட்டுமே இறையருள் பெற்றது' (தேவபாஷை) எனும் கூற்று இம்மரபிற்கு ஏற்புடையதன்று. கோவிலூர் மரபுத் துறவியர், 'ஞான தேசிக சுவாமிகள்' எனும் பட்டப் பெயர் (தசநாமி) உடையோர். வட இந்தியாவில், இம்மரபு, 'கோவிலூர் மண்டலி' என மகா மண்டலேஸ்வரரால் ஏற்கப்பட்டுள்ளது. தொடர்ந்து கடைப்பிடிக்கப்படும் தொன்மையான மரபு என 'ஆச்சார்ய சபா' இதனை ஒப்பி ஏற்கிறது.

**சைவமும் கோவிலூர் மரபும்:**

கோவிலூரிலும், கிளை மடங்களிலும் பல சமாதிக் கோவில்கள் உள்ளன. சைவராய்ப் பிறந்து, அத்துவித தத்துவத்தை ஏற்றுத் துறவடைந்த சுவாமிகள் இங்கு வழிபடப்பெறுகிறார்கள். வழிபாட்டில் சைவம் ஏற்கப்படுகிறது. இந்திய மதங்கள் அனைத்திலும் சைவமே உயர்வுடையது என ஜி.யு.போப் கூறியுள்ளார். கோவிலூர் ஆண்டவரின் உபாசனா மூர்த்தியான திருநெல்லை அம்பாள், கொற்றவாள் ஈசரின் (சிவன்) துணைவியாவார். செட்டிநாட்டுப் பகுதியைச் சேர்ந்த சைவமத நகரத்தார்களின் பொருட்கொடை யாலேயே இம்மரபு தொடர்கிறது. இவ்வாறு, 'குல ஆச்சார' முறையில் சைவ வழிபாடு ஏற்கப்படுகிறது. சமாதிகளில் 'இலிங்கப் பிரதிஷ்டை' செய்யப்படுகிறது.

கோவிலூர் மரபினர், சில வீரசைவ நூல்களைத் தம்பாடத் திட்ட நூல்களாகச் சேர்த்துள்ளமை பற்றிச் சென்ற இதழில் கண்டோம். மேலும், இம்மரபு, சைவ சமயத்திற்குச் செய்துள்ள பணிகள் பற்றிய ஓர் பட்டியலும் காணக் கிடைக்கிறது (7). துறவியர்தம் கொடையை வேத ஆகம நெறியினர் பெரிதும் ஏற்றமை தெரிகிறது. ஆனால் வேத ஆகமத்தோரால் இயலும் வழிபாட்டு நெறி அதே துறவிக்குக் கிடைப்பதில்லை. அத்துவித தத்துவத்தை, "புறப்புறச் சமயம்" எனச் சித்தாந்த சைவம் பகுப்பாய்வு செய்துள்ளது.

நாங்கள் சமயமல்ல, நாங்கள் மதமல்ல, ஆனால் நூற்றாண்டுகளாகத் தொடரும் தத்துவ மரபு என நிறுவுவதற்காகவே மரபு விளக்கம் தரப்படுகிறது.

இவ்வாறு, கோவிலூர் மரபு இரு குறிக்கோள்களுடையதாகக் கருதப்படுகிறது:

1. வேதாந்தப் பிரகடணம் - அத்துவிதம் - பயிற்றுவிப்பு - நூல்கள்.
2. சாது சம்ரக்ஷணம் - துறவியர் சேவை - வழிபாடு - வழிபாட்டுச் சைவம்.

(குறிப்பு : இது வரை, கோவிலூர் மரபு மற்றும் சுபாநுவத்திருவாக்கு நூல் பற்றிய கருத்துக்கள் இடம் பெற்றுள்ளன. அடுத்த இதழ் தொடங்கி, கோவிலூர் ஆண்டவரின் செய்யுள்களைப் பற்றிக் காண்போம்).

**மேற்கோள் நூல்கள் :**


1. "மகாத்ம சரிதாம்ருதம்", காசிகாநந்த ஞானாச்சார்ய சுவாமிகள், 1969.
2. "தாண்டவராய சுவாமிகள் வரலாறு", ஸ்ரீ சதாநந்த சுவாமிகள், ஸ்ரீ நாராயண தாண்டவராய சுவாமிகள் மடாலயம், நன்னிலம், 1960.
3. "மகாத்ம சரிதாம்ருதம்", காசிகாநந்த ஞானாச்சார்ய சுவாமிகள், 1969.
4. "சீடாச்சாரம்", துறவாண்டவர் (கோவிலூர் மரபு), மறுபதிப்பு 1929.
5. "தெய்வத்தின் குரல் (பகுதி3)", ஸ்ரீ சந்திரசேகர சரஸ்வதி சங்கராச்சார்யர், (சுருதியை மட்டும் தழுவுவன ச்ரௌதம். இவை ஸ்மார்த்தத்தினின்றும் வேறுபட்டன - பக்கம் 399).
6. "கைவல்ய நவநீதம்", தாண்டவராய சுவாமிகள், பாடல் 51, 91, (சந்தேகம் தெளிதல்) கோவிலூர் மடாலயம், 2007.
7. கோவிலூர் கும்பாபிசேக மலர், 1978 தொகுப்பாசிரியர் சோமலெ. (சைவ சமயத்திற்குக் கோவிலூர் மடம் செய்த பணிகள் - வேதாந்தமும் சித்தாந்தமும் - பக்கம் 99).


*(தொடரும்...)*

# மடாலய நிகழ்வுகள்

26.03.2015 அன்று அண்ணாமலை ஐயா அவர்கள் குருபூசை மிகச் சிறப்பாக நடைபெற்றது. 28.03.2015 அன்று இலக்கியப் பூங்கா நிகழ்ச்சியில் திருமதி. மு. கற்பகம் உரையாற்றினார். 1.4.2015 அன்று ஸ்ரீமத் சிக்கல் ஆண்டவர் குருபூசை நடைபெற்றது. 3.4.2015 அன்று கோவிலூர் ஸ்ரீலஸ்ரீ முத்துராமலிங்க ஆண்டவர் குருபூசை மிகச் சிறப்பாக நிகழ்ந்தது. அதனையொட்டி 1.4.2015 அன்றும் 2.4.2015 அன்றும் திருவாசகம் முற்றோதல் நிகழ்வு அமைந்தது. 3.4.2015 ஆண்டவர் குருபூசை நிகழ்ச்சியில் அறங்காவலர்களும் அடியவர்களும் சாதுக்களும் கல்வி நிறுவனங்களில் பணிபுரிவோரும் பங்கு பெற்றுச் சிறப்புச் செய்தனர்.

4.4.2015 அன்று கோட்டையூர் லெ.ராம. அண்ணாமலை ஐயா குருபூசை மற்றும் மானாமதுரையில் நாராயணசாமி ஐயா குருபூசை நடந்தன. 13.4.2015 அன்று சண்முகநாதபுரம் முத்தையா சுவாமிகள் குருபூசை நடந்தது. 6.4.2015 அன்று கோவிலூரில் இயங்கிவரும் தமிழ்நாடு கெமிக்கல்ஸ் நிறுவனத்தால் ஏற்படும் பாதிப்புகளைக் குறிப்பிட்டு கெமிக்கல்ஸ் நிறுவனத்தை மூட வலியுறுத்தி, சனாதன தர்ம உலகப்பல்கலைக் கழக அறநிலையின் கல்வி நிறுவனங்கள் சார்பில் போராட்டம் நடைபெற்றது.

## ஆண்டவரின் சீடர்களுடைய அற்புதக் குணங்கள்

(தொடர்ச்சி)

(சீர் வளர் சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்)

சென்ற இதழில் நாம் சிந்தித்த அண்ணாமலை அய்யாவைப் பற்றிய மற்றைய விவரங்கள் எதுவும் கிடைக்கவில்லை. அவர்கள் மெ.மெ. குடும்பத்தில் பிறந்தவர் என்பது தெரிகிறது. ஆனால் அவர்களுடைய பிறந்தநாள், சித்தி அடைந்த நாள் பற்றிய எந்த விவரமும் கிடைக்கவில்லை.

ஆனால் நிச்சயமாக அவர்கள் ஆண்டவருக்குப் பின்னர் தான் சித்தி அடைந்திருக்க வேண்டும்; இல்லை என்றால் ஆண்டவருடைய வரலாற்றிலே சீடரும் சுவிகாரத் தந்தையுமாகிய அண்ணாமலை அய்யாவின் மறைவு இடம் பெற்றிருக்கும். ஆனால் இடம்பெறவில்லை. அவர்களுடைய சமாதியும் காரைக்குடி முத்துப்பட்டிணம் நல்லாஞ்செட்டியின் சமாதியும் ஒன்றாக அமைந்துள்ளன. பின்னர் சித்தி அடைந்த சீடர்கள் கோட்டையூர் அண்ணாமலை அய்யா, நேமத்தான்பட்டி பழனியப்ப அய்யா, பள்ளத்தூர் முத்துவீரப்ப அய்யா ஆகிய மூவர் சமாதிகளும் வேறிடத்தில் வரிசையாக அமைக்கப்பட்டுள்ளன. ஆண்டவருடைய மற்றைய சீடர்கள் கோட்டையூர் அண்ணாமலை அய்யா, நேமத்தான்பட்டி பழனியப்ப அய்யாவும் 1860இல் சித்தி அடைந்ததாகக் கல்வெட்டுக்கள் கூறுகின்றன. எனவே அண்ணாமலை அய்யா ஆண்டவர் சித்தி அடைந்த 1847க்குப் பிறகு 1861க்கும் இடையில் ஏதோ ஓர் ஆண்டில் சித்தி அடைந்திருக்கலாம் என்று நாம் அனுமானிக்கலாம்.

இந்த ஆண்டு பங்குனி மிருகசீருஷம் அன்று குருபூஜையில் கலந்து கொண்ட மெ.மெ. குடும்ப வாரிசுதாரர்கள் ஓர் புதிய செய்தியைச் சொன்னார்கள். நித்தியம் கல்யாணி சமேத கைலாசநாதர் கோவில்கள் கட்டுவதற்கு, அண்ணாமலை அய்யா ஆண்டவரை சுவிகாரம் செய்து கொள்வதற்காக அளித்த நிதிப் பற்றாக்குறையை மெ.மெ. பொதுக்குடும்ப நிதியிலிருந்து அளித்து நிறைவேற்றியதாகவும் அதற்குரிய கணக்கு

உள்ளதாகவும் கூறினார்கள். அந்தச் சான்றினை அளிக்குமாறு கேட்டுக்கொண்டுள்ளோம். இவ்வாறு நல்ல தருமச் செயல்களிலே சம்பந்தப்பட்டவர் அவருடைய குடும்பத்தார் மற்றும் பங்காளிகள் பங்கேற்றிருப்பது அன்றைய சமூகத்தினுடைய பண்பையும் பொறுப்புணர்வையும் வெளிப்படுத்துகிறது.

அடுத்ததாக மற்றொரு சிறந்த சீடரான புண்ணிய சீடர் "பள்ளத்தூர் முத்துவீரப்ப அய்யா" அவர்கள் பற்றிச் சிந்திப்போம்.

ஆண்டவர் தான் சித்தி அடைவதற்கு முன் தன்னுடைய சீடர்களை அழைத்துப் பேசியதைக் கடைப்பிடித்துத் துறவு ஆண்டவர் பட்டம் பெற்றுக் கருணாநிதி சுவாமிகள் கோவில் திருப்பணிகளை மேற்கொண்டிருக்கிறார்கள். ஆனால் மடாலயத்தின் முழு நிர்வாகமும் புண்ணியச் சீடர்கள் பள்ளத்தூர் முத்துவீரப்ப அய்யா, நேமத்தான்பட்டி பழனியப்ப அய்யா ஆகிய இருவரிடமும் ஒப்படைக்கப்பட்டு இருக்கின்றன.

கோவிலூர் மடாலயத்தினுடைய அசையாச் சொத்துக்களாகிய கட்டிடங்கள், நஞ்சை/புஞ்சை நிலங்கள் தெற்குத் தெருவில் உள்ள வெள்ளைக்கல் மடாலயக் கட்டிடம், குருமூர்த்தக் கட்டிடம், ஓட்டுக்கட்டிடம், பனந்தோப்புத் தோட்டம், கலத்தூர் கிராமம், செட்டிவயல், எட்டியேந்தல், உடுக்கவயல் ஆகிய கிராமங்களில் நிலங்கள் இருந்தன. இவை அனைத்துமே பள்ளத்தூர் முத்துவீரப்ப அய்யாவின் தனிப்பட்ட பெயரில் பதிவாகி அவர்களாலே நிர்வகிக்கப்பட்டு வந்திருக்கின்றன.

## விளம்பரங்கள் வரவேற்கப்படுகின்றன

| | |
|---|---|
| பின்அட்டை முழுப்பக்கம் கட்டணம் | ரூ. 1000/- |
| அட்டை உள்பக்கம் கட்டணம் | ரூ. 750/- |
| நூலின் உள்பக்கம் கட்டணம் | ரூ. 500/- |

**தொடர்புக்கு – பதிப்பாசிரியர் "திருநெல்லை"**

---

ஆன்மீக அன்பர்களும் கோவிலூர் மடாலயத்தின் நிகழ்வுகளில் ஆர்வம் கொண்ட பக்தர்களும் திருநெல்லை அம்மன் பெயரில் வெளிவரும் ஆன்மீகத் திங்கள் இதழுக்குச் சந்தா செலுத்தி உறுப்பினராகுமாறு வேண்டுகிறோம்

– பதிப்பாசிரியர்